6-3

# கோரக்க சித்தர் ஸ்தல வரலாறு
# திருவடி போற்றி மலர் 108

தொகுப்பாளர்

சு. ஷண்முகசுந்தர தேசிகர்






குமரிப் பதிப்பகம்
8, நீலா தெற்கு வீதி,
நாகப்பட்டினம் - 611 001.



6.6.96

நாகை சுந்தரராமன் டிரான்ஸ்போர்ட்

உரிமையாளர்

**R. சிவப்பெருமாள், A.M.E.,**

**K. ஜெயப்பிரியா அவர்கள்,**

**திருமணத்திற்கு நேரில் வந்து வாழ்த்திய தங்களுக்கு நன்றி!**

**உஷாராமன் டிரான்ஸ்போர்ட், நாகை.**
**நாகை ராயல் சிட்ஸ் & டவர்ஸ் (பி) லிட்.,**
**ராயல் மார்கெட்டிங் (பி) லிட். - சிங்கப்பூர்.**
**Ph. 22509, 22782, 22824.**

6-3

உ

சிவமயம்

கோடி சூரிய பிரஹாச நிகராய் விளங்கும் ஸ்ரீமத் கோரக்க சித்தர் நிருவிகர்பதூரிய ஜீவ சமாதி ஆலய ஆஸ்ரமம் வடக்குப் பொய்கைநல்லூர்

## (ஸ்ரீவருண வினாயகர் துதி)

விண்ணகத்தேவரும் வேதம் விளம்பிய வியாசரும்
மண்ணகத்தரசரும் மாசற்ற சித்தரொரு பக்தரும்
இன்னிசை பாடிய பாவலர் நால்வரும் பூஜித்து வணங்கிய
கண்மூன்றுடைய வருணவினாயகனை போற்றியே வணங்குவோமே!

(சித்தர்களாக வருபவர்கள் யார் என்பதின் விளக்கம்)

எல்லாம் வல்ல சிவசக்தியின் திருவருளால் சகல உலகங்களும், அண்டபவனங்களும், சகல உயிரினங்களும், காலச்சக்கர நியமங்களும் இயங்கி வருகின்றன. இவற்றுள் நால்வகை தோற்றம் எழுவகைப் பிறப்பு 84 லட்சம் யோனாதி பேதங்களில்

அரிதினும்அரிதாய் விளங்கும் பிறவியே மனிதப் பிறவியாகும். இந்த மனிதப் பிறவியைப்பற்றி நிற்கும் ஆணவமலம், கன்மமலம், மாயாமலம் என்கின்ற மும்மலப்பற்றின் செயலாக எழும் காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சர்யம் ஆகிய தன்மையினால் வரும் ஆணவச் செருக்குகளை அடக்கி அறியாமை என்ற இருள்தனைப் போக்கி இல்லற நெறிதனை இன்னதென்று உணர்த்தி அஞ்ஞானத்தினைப் போக்கி, அறநெறிதனை, விளக்கிக்காட்டி, அன்புநிலையின் மெய்ப்பொருளை உணர்த்தி, பேரின்ப பெருவாழ்வை பெற்றுய்ய மெய்ஞான நிலைதன்னை சுட்டிக்காட்டி, ஆன்மகோடிகளை நல்ல நெறிக்கு ஆளாக்குவதற் கென்றே பரப்பிரும்ம ஜோதிசுடர் ஒளியின் கதிர் அணுக்களே பதினெண் சித்தர்களாக அவதரித்தனர்.

## (ஸ்தல வரலாறு சுருக்கம்)

எல்லாம் வல்ல சிவசக்தியின் திருவருளால் இயங்கும் இவ்வுலக பூமண்டலத்தில் பரதகண்டத்தில் ஞானபூமியாக விளங்கும் சோழமண்டலத்தின் கீழ்திசையாகிய விருத்த காவேரி நதி சங்கமமாகும் திருநாகைக் காரோணம் என்கின்ற சிவராஜதானியாக விளங்கும்

நாகப்பட்டினத்தின் தென்பால் 2½ கிலோ மீட்டர் தூர அளவில் உள்ளது வடக்குப் பொய்கை நல்லூர். இவ்வூர் பன்னெடுங்காலத்திற்கு முன்னர் புஜண்டர்வனம் என்றும் புஜண்டமகரிஷியைத் தரிசிக்க அகஸ்தியர், வசிஷ்டர், துர்வாச மகரிஷி, திருமூலர், கமலமுனி, காலாங்கிநாதர், கௌதமர், காசிபர், விஸ்வாமித்திரர், இடைக்காடர், மச்சேந்திர முனிவர், ராமதேவர், வான்மீகி, சுந்தரநந்தர், போகர், கோரக்கர், அழுகணிச்சித்தர் முதலான சித்தர்கள் வந்து, புஜண்ட மஹரிஷியைத் தரிசித்து தவயோக சித்திகளைப்பெற்று பற்பல அண்டபுவனங்களுக்குச் சென்ற பின்பு, சித்தாஸ்ரமம் என்று விளங்கியது. இந்த சித்தாஸ்ரமத்தில் கயிலாயத்தில் காவல்புரிகின்ற நந்திகேஸ்வரர் அவதரித்து சிவலிங்க பிரதிஷ்டை செய்து பூஜித்து, அதே சிவலிங்கத்தில் உமா மகேஸ்வரன் பிரசன்னமாகி நந்திகேஸ்வரரை கயிலாயம் அழைத்துச் சென்றபின்பு நந்திநல்லூர் என்று விளங்கியது. இந்த நந்திநல்லூரில் மஹாவிஷ்ணுவும் லெட்சுமிதேவியும் சிவலிங்க பிரதிஷ்டை செய்து பூஜித்த பின்னர் நல்லூர் என விளங்கியது. பின்னர் அஷ்டத்திக்கு பாலர்களில் வருணன் இந்த நல்லூரில் அவதரித்து வினாயக பெருமானை பூஜித்து பின்னர் வருண நல்லூர் என விளங்கியது. கோரக்க சித்தர் சிவராஜயோக தீட்சையில் 1008 ஆண்டுகள்

இருந்து நிருவிகர்ப்பதுரிய ஜீவசமாதி ஆனபின்னர் கோரக்கர் ஆஸ்ரமம் என்னும் இந்த சித்தாஸ்ரமத்தில் அருள்பெற்ற மஹான்களால் அமைக்கப்பட்ட திருக்குளங்கள் 121 ஆகும். இவற்றுள் சந்திரபுஷ்கரணி, சூரியபுஷ்கரணி, அக்கினிதீர்த்தம், நவலோக தீர்த்தம் முதலான தீர்த்தங்கள் உள்ளன. 121 தடாகங்கள் உள்ளதால் பொய்கைநல்லூர் என விளங்கியது; தற்போது வடக்குப்பொய்கைநல்லூர் என்றும் விளங்கிவருகின்றது.

இந்த வடக்குப்பொய்கை நல்லூரில் அருள்மிகு ஸ்ரீமத்கோரக்க சித்தர் துரிய ஜீவ சமாதி ஆலய ஆஸ்ரமத்திற்குத் தென்பால் பாலசந்திர வினாயகர் ஆலயமும், பால்மொழி அம்மாள் உடனாகிய ஸ்ரீ நல்லூர் நாதேஸ்வரசுவாமி ஆலயமும், காட்டு அய்யனார், ரோட்டு அய்யனார், நல்லமுத்து மாரியம்மன் ஆலயமும் உள்ளன. கோரக்கசித்தர் ஆலய ஆஸ்ரமத்திற்கு வடபால் ஸ்ரீதிரெளபதியம்மன் காளியம்மன் ஆலயமும் வல்லார் ஞானசபையும் கலிங்கமாகாளியம்மன் ஆலயமும் அருள்மிகு ஸ்ரீசௌந்திர நாயகி அம்பாள் உடனாகிய ஸ்ரீநந்திநாதேஸ்வர சுவாமி ஆலயமும் அமைந்துள்ளன.

## பதினெண் சித்தர்களில்

1. கோரக்க சித்தர் தனிப்பெரும் சிறப்பு அம்சங்கள் கொண்டு திகழ்கின்ற ஞானச்சுடர் ஒளியாகும்.

2. கோரக்கர், அரிச்சந்திரன் ஆட்சிக் காலத்தில் கொல்லி மலைச்சாரலில் சம்பல்பட்டி என்ற கிராமத்தில் அவதரித்தவராவர்.

3. கோரக்கசித்தர் கர்ப்பந்தரித்து பிறந்தவரல்ல. சாம்பல்மேட்டில் 10 வயது உடைய சிறுவனாக அவதரிக்கப்பட்டவராவர்.

4. கோரக்கசித்தர் சரீரத்தை எந்த ஒரு ஆயுதங்களாலும் பஞ்சபூதங்களாலும் அழிக்க முடியாத வச்சிரகாய சரீர நிலைதனை பெற்றவராவர்.

5. தனக்கென்று எதையுமே கருதாது மண்ணுயிர் யாவும் நல்வாழ்வு பெற்று இறையருள்கொண்டு பேரின்ப பெருவாழ்வை அடைய 3689 நூல்களை எழுதியும், அவற்றுள் பரிபாஷை இன்றி பட்டவர்த்தனமாய் எல்லோரும் எளிய முறையில் தெரிந்துகொள்ள அருந்தொண்டு ஆற்றியவராவர்.

6. போகரும் கோரக்கரும் சிதம்பரத்தில் சிதம்பர ரகஸ்யம் என்ற தன்மையை ஸ்தாபித்தவராவர்.

7. பழனியில் நவபாஷாண பால தெண்டாயுதபாணியை கோரக்கரும் போகரும் சேர்ந்து உருவாக்கி அமைக்கப்பட்டதாகும். (இதற்கு ஆதாரம்) சதுரகிரி மஹாத்மியம் என்ற நூலில் கீழ்வரும் பாடலில் காணலாம்.

திருப்பழனி மல்லூா தண்ணில் போகரோடு
தெண்டபாணி தெய்வ உருவம் செய்தோம்.
கருவான நவலோகநவ ரெத்தினங்கள்
காரமிகுபாஷான ரசமும் கெந்தி
உருவான உப்புவகை இருபதோடு
உபரசங்கள் நூற்றிருபதும் ஒன்றாய் கூட்டி
அருளான பூ நீற்றால் மூப்பு செய்து
அமைத்துவைத்தோம் கந்தவேல் கடவுளென்றே

உப்பு வகை இருபதில் 11 உப்பு வகை இந்த பூலோகத்திலும் பாக்கி உள்ள 9 உப்பு வகையை கோரக்கர் விண்ணகம் சென்றும் நாகலோகம் சென்றும் அரும்பாடுபட்டு கொண்டுவந்து 5 பௌர்ணமியில் பூஜை செய்தது.

நவலோகம் 9.

நவரத்தினங்கள் 9

நவபாஷாணம் 9

ஆக 27ம் நக்ஷத்திரங்களாகும்.

20 வகையான உப்பு வகைகளும், உபரசங்கள் 120ம் (பச்சிலை மூலிகை சாறுகள்) கலந்து உருவாக்கப்பட்டது நவபாஷாண பாலதெண்டாயுதபாணியாகும்.

இதை தைப்பூச நாள் அன்று இரவு பௌர்ணமி 12 மணி அளவில், சந்திரன் உச்சியில் பிரகாசிக்கின்ற சமயத்தில் பழனி பாலதெண்டாயுதபாணியை ஸ்தாபித்தார்கள்.

8. போகரும் கோரக்கரும் சேர்ந்து சீனாவில் பிரமாண்டமான சிவன் கோவில் கட்டி கும்பாபிஷேகம் செய்து உள்ளார்கள்.

9. போகரை கோரக்கர் பழனியில் சமாதி செய்து வைத்தார். அதன்பின்னர்

10. போகரும் கோரக்கரும் இந்த வடக்குப் பொய்கைநல்லூருக்கு ஐப்பசி பரணி நாள் அன்று முதன்முதலாக வந்துள்ளார்கள்.

11. கோரக்கர், வேளாங்கண்ணி மாதா குளத்தின் மேல்கரையில் வெள்ளைநிற ஆலமரம் உள்ளது. இதனடியில் 1008 ஆண்டுகள் சிவராஜயோக நிஷ்டையில் அமர்ந்து ஆடி பௌர்ணமியில் நிஷ்டையிலிருந்து பூரண சித்திகளையடைந்து நிஷ்டையைவிட்டு எழுகின்ற நேரத்தில், அன்னை ராஜராஜேஸ்வரி குழந்தை முருகனோடு பிரசன்னமாகி கோரக்கரே உமக்கு என்ன வரம் வேண்டும் என்று கேட்க, அதற்கு கோரக்கர் பாடல் வடிவமாய் கேட்கின்றார்.

அண்ட பிண்டமாய் நிறைந்து எல்லாம் வல்ல
அற்புதமாய்
நிராமயம் சேர் ஆத்தாள் சக்தி
தொண்டர்கள் போற்றும் பதத்திலே
லோகமாதா
நாற்பத்து முக்கோண ஓங்காரவட்டத்தில்
சூரியகலை
பிரகாசஒளியிலே பிறைவட்ட பீடமதில்
அமர்ந்ததாயே
மதியான பதினாறுகலையும் பிரகாசிக்கின்ற
உலக ரட்ச
கரான கர்த்தாவை கரத்தில் வைத்தாயே

அம்மா உனக்கு கெடியுண்டு

முடியுண்டுகெடியுண்டு

மேதினியில் வெகு கோடிஜனக்கூட்டமுண்டு

அம்மா உனைவந்து துதிப்பவர்க்கு

வறுமைபிணி

கருமபிணி மனப்பிணி வினைதீர அதிகார

வரம்அருளும் வேலென்னும் கண்ணிலே

கடலோரம் அமர்ந்த தாயே - மெய்ஞான

சுடரொளிய உலகங்களெல்லாம் போற்றும்

தெய்வமாய் அமர்ந்த தாயே, போற்றி போற்றி!

என்று அன்னையை கேட்டுக்கொண்டு வடக்குப்பொய்கை நல்லூரில் ஸ்ரீநந்திநாதேஸ்வர சுவாமி ஆலயத்தின் வலது பாகத்தில் வன்னி மரத்தின் கீழ் தானே சமாதிபீடம் அமைத்து அதில் திருநிகற்ப துரிய ஜீவசமாதி ஆனார்.

தற்போது நிகழும் கலியுகத்தில் செல்லானது ஆண்டு 5096 ஆகும். இதற்குமுன் உள்ள யுகத்தில் 408 பருவிருத்தியில் ஐப்பசி பரணி நாளில் திருவிகற்ப துரிய ஜீவசமாதி ஆனார். பருவிருத்தி என்பது 60 ஆண்டுகள் கொண்டது. ஆக இது நாள் வரை 34576 ஆண்டுகள் ஆகின்றன எனப்படும்.

இந்த கோரக்க சித்தர் ஆலய ஆஸ்ரமத்தில் தினந்தோறும் காலை மதியம் இரவு ஆக மூன்று கால பூஜைகள் நிகழ்ந்து வருகின்றன.

ஆண்டுதோறும் ஐப்பசி பரணி நாள் அன்று முதல் நாள் மறுநாள் ஆக மூன்று தினங்களிலும் அபிஷேக ஆராதனை அர்ச்சனை செய்து சிவ அடியார்களுக்கு அன்னதானங்கள் வழங்கி, ஐப்பசி பரணிநாள் அன்று இரவு சிறப்பு சொற்பொழிவு, இன்னிசை, பட்டிமன்றம் முதலானவை நிகழ்வதோடு அன்று இரவு 2 மணி அளவில் கோரக்க சித்தர் சன்னிதியில் ஸ்ரீ நந்திநாதேஸ்வர ஆலயத்திலிருந்து பஞ்சமூர்த்திகள் புறப்பட்டு வந்து காட்சி அளித்தல் சிறப்பாக நிகழ்ந்து வருகின்றது.

வன்னி மரத்தின் கீழ்பாகத்தில் தானே சமாதி பீடம் அமைத்து அதில் திருவிகற்பதுரிய ஜீவசமாதி ஆனார்.

கீவளூரில் உள்ள 35 வயது உள்ள அம்மையாருக்கு புற்றுநோய் நீங்கி குணமாகி உள்ளது. திருமணம் ஆகாது உள்ளவர்கள் மூன்று பௌர்ணமி வந்து தரிசித்தால் உடனே திருமணம் ஆகின்றது.

கோரக்க சித்தர் திருவாய் மலர்ந்தருளிய சந்திரரேகை என்னும் நூலில் காணப்படுகின்ற உட்பொருள் விளக்கம்.

கலியுகத்தில் கால பருவங்களின் இயக்கங்கள், கிரஹ நிலைகளின் மாற்றங்களின் விவரம், இன்னின்ன காலங்களில் மக்கள் இத்தன்மையாக வாழ்வார்கள் என்றும், நமது தமிழக மண்ணை இன்னவர்கள் அரசாட்சி புரிவார்கள் என்றும், கலியுகாதி 5049ல் வெள்ளையரின் ஆட்சி நீங்கி நாடு சுதந்திரமடைந்து சமரச ஆட்சி நிலவும் என்றும், பாரத பூமியை விதவை அரசாளுவார் என்றும், தமிழகத்தில் சூரியக்கொடி 36 ஆண்டுகள் ஆளும் என்றும், இதில் கூத்தாடிகளின் ஆட்சி நிகழும் என்றும், அரசாங்கமே கர்ப்பத்தடை செய்ய வலியுறுத்தும் என்றும், அரிஜன மக்கள் படிப்பறிவு பெற்று பட்டம் பதவிக்கு வருவார்கள் என்றும், பிராமண குலத்தவர்கள் தாழாத மனிதரிடம் தாழ்ந்து நின்று ஊண் பொருளை உணவாய் கொள்வர், மது மாமிசம் சாப்பிடுவார்கள் என்றும், கோவில் சிலைகளை வெளிநாடுகளுக்கு திருடிச் செல்வர் என்றும், போலி சாமியார்கள் ஜடாமுடி கஷாயம் பூண்டு கபடம் கொண்டு சித்தர்கள் என்று பெயர் சூட்டிக்கொண்டு மாந்தரை கெடுத்தும் காசு பணம் பறிப்பர் என்றும், கன்னிப் பெண்களை

வெளிநாடுகளுக்குக் கடத்துவார்கள் என்றும், ஜாதி என்ற நிலை மாறி, இன சங்கம் கோஷ்டிகள் ஏற்படும் என்றும், இவையெல்லாம் நடக்கின்ற இந்த காலத்தில், கி.பி. 2000த்தில்.

வடக்குப் பொய்கைநல்லூர் அருள்மிகு ஸ்ரீகோரக்க சித்தர் திருவிகற்ப துரிய ஜீவ சமாதி பீடத்திற்கு போகர் வருவார் என்றும் அது சமயம் ஜோதிலிங்கம் தோன்றும் என்றும் பட்டவர்த்தமாக கூறி இருக்கின்றார்கள் என்பதைக் காணலாம்.

## சுப மங்களம் சுபம்

1. விரைந்து வாருங்கள் கோரக்கர் சன்னிதிக்கே
வியக்கிற நல்வாழ்வளித்திடும் கோரக்க
சித்தரை
நிறைமதியான பௌர்ணமியில் வழிபட்ட
பேர்களுக்கே
நினைத்தது நடக்கும் கேட்பது கிடைக்கும்
நிறை போன்ற பாவங்கள் அகற்றியே
தீவினைமாய்த்திடும்
திருவருள் வழங்கியே தருணத்தில்
காத்திடும்
குறையற்ற செல்வமொரு பல்லாண்டு வாழ்ந்திட
கோரக்க சித்தரை போற்றியே
வணங்குவோமே.

2. விண்ணகத்தேவரும் நன்னுதற்கரிய
ஒண்ணாகோரக்கசித்தரை
திண்ணமாய் உறுதிகொண்டு தினந்தோறும்
வணங்குவோருக்கு
எண்ணிலா பிறவி துன்ப இடரதைத் தவிர்த்து
நின்று
உன்னத வாழ்வு நல்கி துணையாக நிற்கும்
கோரக்க சித்தர் திருத்தாள் போற்றி போற்றி.

கோரக்க சித்தர் ஆஸ்ரமத்திற்கு ஆண்டு தோறும் நிகழும் ஐப்பசி பரணி பெருவிழாவிற்கு திருமிகு கிருபானந்தவாரியார், குன்றக்குடி அடிகளார், இசைஞானி இளையராஜா, கங்கை அமரன், பிரபு தேவா, ஆகியோர் வந்து கலந்துகொண்டு உரை நிகழ்ச்சிகள், இசை நிகழ்ச்சிகள் செய்துள்ளார்கள்.

அகரமும் உகரமும் அறிந்த மெய்ஞானியும்
பகரவேண்டிய பதங்கள் வோர் ஆயிரமும்
மகரமாகிய மாய்கையால் மறைத்திட்ட தன்மையை
நிகரிலாமலே வெளியுர உறைத்திட்ட
கோரக்க நாதனை போற்றியே வணங்குவோம்.

நினைக்கின்ற போதெல்லாம் இனிக்கின்றதே,
நிலையான பேரின்பம் சுரக்கின்றதே,
எனையாளும் கோரக்க நாதன் இருக்கையிலே
எத்தனை இடர்பாடு துன்பங்கள் வந்தாலுமே
நிலையா தினையளவும் தீவினைகள்
அணுகாது காத்திடுமே,
தினந்தோறும் அவர் புகழ் பாடிடவே
இணையிலா சிவசக்தி பேரருள் வழங்கிடுமே,
இதயத்தில் உறுதியாய் நிலைத்திடவே
கோரக்கர் அருள்
**நிலைத்து நின்றிடுமே.**

நினைத்து மனமுருகியே நினைக்கின்ற
போதிலே
நிலையான மன அமைதி கிடைக்கின்றதே,
தினையளவும் தீங்கு வாராது காத்திடுமே
திருவருள் புரிகின்ற கோரக்கர் திருவடிகளே,
வினையாளும் மனித சதியாளும் வரும்
இடரை நீக்கிடுமே
வியக்குறவே வாழ்த்திட பேரருள் தந்திடுமே
எனையாளும் கோரக்க நாதர் இருக்கையிலே
யென்றென்றும் நிலையான திருவருள்
தந்தென்னை காத்திடுமே

(இந்தப் பாடலை இயற்றியவர் சைவசமய குருகுல ஆசிரியர் சு. ஷண்முகசுந்தரதேசிகர், சிவன் சன்னிதி வடக்குப் பொய்கைநல்லூர்.)

ஸ்ரீமத் கோரக்கசித்தர் ஆலய ஆஸ்ரமத்திலிருந்து இரவு 7½ மணி அளவில் அன்னக்காவடிகள் புறப்பட்டு இல்லங்கள் தோறும் செல்லும். சாதங்கள் மட்டும் அன்னக்காவடியில் போடுவார்கள். இரவு 9 மணி அளவில் கோரக்க சித்தர் ஆலயத்திற்குக் காவடிகள் இரண்டும் வந்து அந்த சாதங்களை வைத்து பூஜை செய்து சிவனடியார்களுக்கு அன்னம் வழங்கி வருகின்றன. இது வெகு காலங்களாகவே நிகழ்ந்து வருகின்றது.

புத்திரப்பேறு இல்லாதவர்கள் இந்த சாதத்தை வாங்கிச் சாப்பிட்டால் புத்திர தோஷங்கள் நீங்கி குழந்தைகள் பிறக்கின்றன.

இந்த கோரக்க சித்தரை வந்து தரிசிக்கின்ற பக்த கோடிகளுக்கு நோய்கள் நீங்குகின்றன. மனக்கவலைகள் நீங்குகின்றன. கோர்ட்டு கேஸ் உள்ளவர்களுக்கு வழக்குகள் வெற்றியை அளிக்கின்றன. திருமணம் ஆகாது கால தாமதமாக உள்ளவர்களுக்கு உடனடியாகவே நல்லவிதமாக திருமணம் நிகழ்கின்றது.

பில்லி சூனியம் ஏவல் முதலான தீய சக்திகளால் பாதிக்கப்படுகின்றவர்கள் குணமாகி சௌகர்யங்கள் ஏற்படுகின்றன. கோரக்க சித்தர் திருவடியில் சாத்திய சந்தனத்தையும், வங்காள மஞ்சள் வைத்து பூஜை செய்து, மஞ்சளையும் இழைத்து, தண்ணீர் விட்டு உள்ளுக்கு சாப்பிட்டால் தீராத நோய்கள் தீர்ந்து விடுகின்றன.

சுபம்.

இதனைத் தொகுத்து அளித்தவர் :

சு. சண்முகசுந்தர தேசிகர்,
சிவன் சன்னிதி,
வடக்குப் பொய்கைநல்லூர்.



உ
சிவமயம்

# கோரக்க சித்தர் திருவடி போற்றி மலர் 108.

ஆதியும் அந்தமுமில்லா அற்புதக்
கணபதியைப் போற்றி செய்து
பாதிமதி முடிமேலணிந்த சங்கரனின்
துணையினாலும்
சாதி சமயம் கடந்து நின்ற சாம்பவியால்
அருள் பெற்ற கோரக்கர்பதம்
ஓதி வழிபாடு செய்ய கணபதியின் திருவருளும்
கலைமகளின் திருவடியுங்காப்பதாமே.

1. அன்புநிலைசார் ஓம் என்ற பிரணவத்தின் பொருளே போற்றி!
2. அன்பர் மனக்குகையில் வாழும் அருந்தவத்தரசே போற்றி!
3. மச்சமுனி அருளினாலே பூமாதேவி மைந்தனாக அவதரித்த கோரக்கர் திருத்தாள் போற்றி!
4. மச்சமுனி சீடராக திகழ்ந்திட்ட கோரக்கர் போற்றி!

5. தில்லை நடராஜர் திருவருளின் துணையினாலே சிவராஜயோகத்தை செய்திட்ட கோரக்கர் போற்றி!

6. எல்லை இலா அருள் ஞானம் பெற்று ஏகாந்த சித்தராய் திகழ்ந்திட்ட கோரக்கர் போற்றி!

7. சின்மயப் பொருளாய் விளங்கும் கோரக்க ரிஷியே போற்றி!

8. சின்மயானந்த சிவராஜயோக கூடராக விளங்கும் கோரக்க முனியே போற்றி!

9. குவலயம் போற்றும் குணப்பெருங்குன்றம் கோரக்கநாதா போற்றி!

10. குவலய மண்டலத்ததிபதி யாவரும் போற்றிட வந்த கோரக்கநாதர் போற்றி!

11. அஷ்டமாசித்தி பெற்று அழியாத தேகங்கொண்ட கோரக்கநாதர் போற்றி!

12. திருஷ்டாந்தமாகவே தான் நிகழ் காலந்தனை உரைத்த கோரக்கநாதர் போற்றி!

13. தென்திசை உலகினை சமநிலையாக்கிய அகஸ்தியர் போற்றிடும் கோரக்கர் போற்றி!

14. தென்திசைக்கதிபதி எமதருமராஜனை சாபமது கொடுத்த கோரக்கர் போற்றி!

15. மண்ணகத்தரசரும் மாசற்ற தொண்டரும்
போற்றிடும் கோரக்கர் போற்றி!

16. விண்ணகத்தேவரும் வியக்குறுவண்ணம்
வேதமுங்கடந்த நாதனாம் கோரக்கர் போற்றி!

17. எண்ணற்ற கோடி அண்டங்கள் யாவும்
சென்றிட்ட கோரக்கநாதர் போற்றி!

18. எண்திசை யாவுமே புகழ்பெற்று
விளங்கிடும் கோரக்க சித்தர் போற்றி!

19. பக்தரைக் காக்கவே பழனியில் போகரும்
பொய்கை நல்லூரில் ஜீவசமாதி ஆன
கோரக்கர் போற்றி!

20. பக்தர்கள் யோகிகள் ஞானிகள் யாவரும்
போற்றிடும் கோரக்கர் போற்றி!

21. பாதிமதி முடிமேலணிந்த சங்கரனின்
திருவடி சமாதி மேடையில் நின்றிடச்
செய்த கோரக்கர் போற்றி!

22. ஆதிசிவ சங்கரியின் திருவடி சமாதி
பீடத்தில் நின்றதோர் அற்புதக்காட்சி போற்றி!

23. வெட்டவெளியாகமீதில் துலங்கிடும்
மெய்ஞான சுடராம் கோரக்கர் போற்றி!

24. திட்டமுடன் தீவிரமாய் உண்மை நெறி
உரைத்திட்ட கோரக்கர் திருத்தாள் போற்றி!

25. ஜாதிமத சமயத்தைச் சற்றேனும் சாராத
சிற்குருவாம் கோரக்கநாதர் போற்றி!

26. நதியை நிலைநாட்ட வந்த உத்தமத்
தலைவராய் விளங்கிடும் கோரக்கநாதா
போற்றி!

27. தானென்ற அகந்தையைவிட்டு அன்போடு
துதிப்போர்க்கு தோன்று கோரக்கர் போற்றி!

28. தானென்ற ஆணவக்கோட்டையை
அகற்றிடவந்த கோரக்கர் போற்றி!

29. அஞ்ஞான இருள்தன்னை நீக்கவே
மெய்ஞான சுடராகவந்த கோரக்கர் போற்றி!

30. மெய்ஞான நிலை இல்லா வேதாகமம்
தன்னை வெறுத்திட்ட கோரக்கர் போற்றி!

31. திடமான மனவுறுதியோடு துதிப்போர்க்கு
அருளிடும் கோரக்கர் போற்றி!

32. நடமாடும் திருக்கோவில் மனிதனின்
உள்ளம் என சொன்ன கோரக்கர் போற்றி!

33. கற்றவர் போற்றுவர் மற்றவர் அறியார்
கோரக்க ஞானச்சுடராம் போற்றி!

34. கற்றவர் கல்லாதாரென்கின்ற பேதமின்றி
அருள்தனை வழங்கிடும் கோரக்கர் போற்றி!

35. சிந்தையை யடக்கியே சும்மாவிருக்கின்ற
நிலைதன்னைப் பெற்ற கோரக்கர் போற்றி!

36. சிந்தையை யடக்கியே சிவராஜயோக
ஜீவசமாதி ஆன கோரக்கர் போற்றி!

37. இன்புறுக்ருணை இனிதெனக் கொண்டு
ஏகாந்தவெளியினிலமர்ந்த கோரக்கர் போற்றி!

38. இல்லறநெறிதனை இன்னதென்றுரைத்
திட்ட தத்துவஞானியாம் கோரக்கர் போற்றி!

39. ஐந்தெழுத்தான பஞ்சாட்சரத்திற்கு
பொருள்சொன்ன கோரக்கர் போற்றி!

40. ஐந்துவகைப் பூதத்தினியல்போடு
ஆராதாரத்தின் பொருள்சொன்ன
கோரக்கர் போற்றி!

41. மானிடதேகம் அழியாதிருக்கும்
நிலைபொருள் சொன்ன கோரக்கர் போற்றி!

42. மானிடர் யாவரும் அருள்ஞானம் பெற்றிட
நூல்பல இயற்றிய கோரக்கர் போற்றி!

43. சகலஉயிர் யாவுமே தன்னுயிராகவே
எண்ணிடும் கோரக்கர் போற்றி!

44. சகல அண்டபுவனமும் சாம்பவியாளருளாலே
இயங்குகின்ற தன்மைதனை
எடுத்துரைத்த கோரக்கர் போற்றி!

45. சத்தியசன்மார்க்க சற்குருநாதனாம்
கோரக்கர் திருத்தாள் போற்றி!

46. சத்தியசன்மார்க்கம் வழிவழியாக
வளர்ந்திடச் செய்த கோரக்கர் போற்றி!

47. உள்ளதையுள்ள தாயுண்மையை
உரைத்திட்ட கோரக்கநாதர் போற்றி!

48. நல்லதை நாள்தோறும் நாடியே
செய்வோர்க்கு நற்றுணையாம் கோரக்கர்
போற்றி!

49. நம்பிக்கையோடு வழிபாடு செய்வோர்க்கு
அருள்ஞானம் வழங்கும் கோரக்கர் போற்றி!

50. நம்பிக்கையோடு நாள்தோறும் வந்து
வணங்கிடும் பேருக்கு தருணத்தில்
காத்திடும் கோரக்கர் போற்றி!

51. சீனப்பதிகத்திலே போகரும்
தானுமாய்சித்துபல செய்த கோரக்கர் போற்றி!

52. சீனப்பதி தன்னிலே சிவன்
கோவிலமைத்திட்ட கோரக்கநாதர் போற்றி!

53. பொதிகைமலைதன்னிலே
சித்துவிளையாடியே நாதனெனும் பேர்
பெற்ற கோரக்கர் போற்றி!

54. பொய்கைநல்லூரிலே தன்பெயர் என்றும் விளங்கவே ஆலயம் அமைத்த கோரக்கர் போற்றி!

55. அடியார்கள்படும் துன்பம் அனைத்துமே பொடிப்பொடியாக்கிடும் கோரக்கர் போற்றி!

56. அடியார்கள் நிலைதன்னை அளந்தவர்க்கேற்ற அருள்தன்னை வழங்கிடும் கோரக்கர் போற்றி!

57. பூலோக சிம்மாசனத்தினில் அருள்ஆட்சி செய்கின்ற கோரக்கர் திருத்தாள் போற்றி!

58. பூலோக எதிர்காலந்தன்னை நெறியாக வகுத்திட்ட கோரக்கர் திருத்தாள் போற்றி!

59. சட்டமுனி பிரும்மமுனி கும்பமுனி போற்றிடும் கோரக்கர் திருத்தாள் போற்றி!

60. அஷ்டமுனி தேவரும் சிவகணத்தலைவரும் போற்றிடும் கோரக்கர் போற்றி!

61. ஆணிப்பொன்னம்பலத்தையன் அருளாலே மரணமில்லாத்தலைவனாம் கோரக்கர் போற்றி!

62. ஆணிப்பொன்னம்பல நாதனினருளாலே அருள்ஞானச் சுடரான கோரக்கர் போற்றி!

63. திருபழனி மலைதன்னில் போகரை
சமாதிசெய்திட்ட கோரக்கர் போற்றி!

64. திருப்பொய்கைநல்லூரில் அருளாட்சி
செய்கின்ற கோரக்கர் போற்றி!

65. வஞ்சக பொய்சூது நெஞ்சுடையாளரை
அஞ்சாது தண்டிக்கும் கோரக்கர் போற்றி!

66. சங்கையெனும் மாசகல சந்திர
ரேகைதனைச் சாற்றிட்ட கோரக்கர் போற்றி!

67. மங்கையர்யாவரும் மனமுவந்து வாழ்ந்திட
முத்தாரம் எழுதிய கோரக்கர் போற்றி!

68. பக்திநிலை பெருகவே பாவங்கள்
அகன்றிட கர்மகாண்ட நூல் சொன்ன
கோரக்கர் போற்றி!

69. முக்திநிலை பெருகியே அருள்ஞானம்
விளங்கவே மெய்ஞான நூல் தந்த
கோரக்கர் போற்றி!

70. சித்தானசித்து விளையாடுதற்கே
ஜெகஜால திறவுகோல்தானுரைத்த
கோரக்கர் போற்றி!

71. சித்தர் சம்வாதமென்ற நூலிலே சித்தர்கள்
மறைந்திட்ட பொருள்தன்னை விளக்கிய
கோரக்கர் போற்றி!

72. தனிதொகுப்பு நூல்தனில் தான் எழுதிய நூல் விவரமதனை விரிவாக காட்டிட்ட கோரக்கர் போற்றி!

73. தனிஞானமென்றதொரு நூலதனில் சிவயோக சாதனையைக் காட்டிய கோரக்கர் போற்றி!

74. தவநிலையின் தத்துவத்தை நவநாத திறவுகோலில் எடுத்துரைத்த கோரக்கர் போற்றி!

75. சிவயோக ஞானிகளும் சித்தரொடு பக்தர்களும் சீர்பாடும் கோரக்கர் போற்றி!

76. நோய்பிணி துன்பங்கள் வேரோடகலவே மூலிகை சூடாமணி எழுதிய கோரக்கர் போற்றி!

77. நோயின்றிவாழவே சர்வ மூலிகை நிகண்டென்னும் நூலெழுதிய கோரக்கர் போற்றி!

78. நிறைமனத்தோடு நினைந்துருகி வணங்கிடும் பேருக்குக் குறைவற்ற நிதிநல்கும் கோரக்கர் போற்றி!

79. திரைபோன்ற பாவங்கள் எத்தனை செய்தாலும் தீர்த்தருளும் கோரக்கர் போற்றி!

80. குருவேநின் சன்னிதிக்கு வாடியே
வருவோர்க்கு நாடியே அருள்கின்ற
கோரக்கர் போற்றி!

81. கோரக்க சரணாய நமஸ்த்தென்ற
மந்திரத்தை நாள்தோறும் துதிப்போர்க்கு
பாவங்கள் அகற்றிடும் கோரக்கர் போற்றி!

82. மண்ணுயிரனைத்தையும் தன்னுயிராக
எண்ணிடும் கோரக்கர் திருத்தாள் போற்றி!

83. மண்ணுயிர் யாவுமே நல்வாழ்வு பெற்றிட
நூல்பல இயற்றிய கோரக்கர் போற்றி!

84. வேளாங்கண்ணியிலே
வெள்ளாரவிருட்சத்தில் சிவராஜயோகம்
செய்த கோரக்கர் போற்றி!

85. வேலுடன் கந்தனை ஏந்திய வண்ணமாய்த்
தோன்றிய அன்னையை உலகங்கள்
போற்றிட வரம் பெற்ற கோரக்கர் போற்றி!

86. திருமுருகனருளாலே பொதிகை
மலைமீதிலே சமாதியான கோரக்கர்
போற்றி!

87. பேரருள் விளங்கவே ஆனைமலை
தன்னிலே சமாதியான கோரக்கர் போற்றி!

88. பாண்டிமாநாடதனில் கோரக்க
நான்திடலில் சமாதியான கோரக்கர்
போற்றி!

89. பார் புகழும் சோழநாட்டுத்
திருநாகைக்காரோணத்தென்பால்
விளங்கிடும் திருப்பொய்கைநல்லூரில்
சமாதி ஆன கோரக்கர் போற்றி!

90. கொல்லிமலைச்சாரலிலே சதுரகிரி
தன்னிலே சமாதியான கோரக்கர் போற்றி!

91. கொள்ளிடம்பால் மணிமுத்தா நதிதீர பரூர்
பட்டியிலே சமாதியான கோரக்கர் போற்றி!

92. கர்நாடக மாநிலத்தில் பத்மாசூரன்
மனைதன்னில் சமாதி ஆன கோரக்கர்
போற்றி!

93. கர்மங்களகன்றிடவே கோரக்பூர்
தன்னிலே சமாதிநிலைபெற்ற கோரக்கர்
போற்றி!

94. எத்தனை இடர்பாடு எய்திட்ட போதினும்
சற்றேனுமணுகாது காத்திடும் கோரக்கர்
போற்றி!

95. சித்தனை என்றென்றும் சிந்திக்கும்
பேருக்கு நல்லருள்பாலிக்கும் கோரக்கர்
போற்றி!

96. கடமையை உணர்ந்திடும்
கருத்தறிவாளரை காத்திடும் கோரக்கர்
போற்றி!

97. மடமையைப் போகியே மாசுகள் நீக்கிடும்
குணப்பெருங்குன்றமாம் கோரக்கர்
போற்றி!

98. ஆணவமகன்றிட அஞ்ஞானம் மறைந்திட
மெய்ஞானம் வளர்த்திட செய்த கோரக்கர்
போற்றி!

99. அடிமை நிலைதன்னை அடியோடகற்றிட
அருந்தொண்டாற்றிய கோரக்கர் போற்றி!

100. திருவருள் பெருகி ஜீவர்கள் வாழ்ந்திட
சித்துக்கள் பல செய்த கோரக்கர் போற்றி!

101. திருமாலினருளாலே
எதிர்காலந்தன்னையே எடுத்துரைத்த
கோரக்கர் போற்றி!

102. நினைந்துருகி வணங்கிடும்
அடியாரைக்காத்திடும் நின்மலநாதனாம்
கோரக்கர் போற்றி!

103. நினைந்து மனமுருகியே வணங்கிடும்
பேருக்கு நினைப்பதையளித்திடும்
கோரக்கர் போற்றி!

104. என்றென்றும் நிலையான புகழ்தன்னைப்
பெற்ற கோரக்க சித்தர் திருத்தாள்
போற்றி!

105. எண்திசைக் காவலர் யாவரும் போற்றிடும்
கோரக்கர் பதங்கள் போற்றி!

106. சிவசக்தி அருளாலே உலகங்கள்
இயங்கிடும் நிலைதன்னை காட்டிட்ட
கோரக்கர் போற்றி!

107. சிவஞானநிலை விளங்க
சித்தியெலாம்தான் விளங்க
செம்பொருளாம் கோரக்கர் போற்றி!

108. சிவசக்தி அருளாலே என்றென்றும்
நிலையாகத் திகழ்கின்ற கோரக்க சித்தர்
போற்றி!

போற்றி!

ஸ்ரீமத் கோரக்க சித்தர் திருவடி போற்றி மலர் 108

இயற்றியவர் சு. ஷண்முகசுந்தர தேசிகர்,
சிவன் சன்னிதி,
வடக்குப்பொய்கைநல்லூர்.

# கீதா சாரம்

எது நடந்ததோ, அது நன்றாகவே நடந்தது
எது நடக்கிறதோ, அது நன்றாகவே நடக்கிறது
எது நடக்க இருக்கிறதோ அதுவும்
நன்றாகவே நடக்கும்
உன்னுடையது எதை இழந்தாய்?
எதற்காக நீ அழுகிறாய்?
எதை நீ கொண்டு வந்தாய், அதை நீ
இழப்பதற்கு?
எதை நீ படைத்திருந்தாய், அது
வீணாகுவதற்கு?
எதை நீ எடுத்துக் கொண்டாயோ, அது
இங்கிருந்தே எடுக்கப்பட்டது.
எதை நீ கொடுத்தாயோ, அது இங்கேயே
கொடுக்கப்பட்டது.
எது இன்று உன்னுடையதோ,
அது நாளை மற்றொருவருடையதாகிறது.
மற்றொரு நாள், அது வேறொருவருடைய தாகும்.
இந்த மாற்றம் உலக நியதியாகும்!



6.6.96

**நாகை சுந்தரராமன் டிரான்ஸ்போர்ட்**

உரிமையாளர்

**R. சிவப்பெருமாள், A.M.E.,**

**K. ஜெயப்பிரியா அவர்கள்,**

**திருமணத்திற்கு நேரில் வந்து**
**வாழ்த்திய தங்களுக்கு நன்றி!**

உஷாராமன் டிரான்ஸ்போர்ட், நாகை.
நாகை ராயல் சிட்ஸ் & டவர்ஸ் (பி) லிட்.,
ராயல் மார்கெட்டிங் (பி) லிட். - சிங்கப்பூர்.
Ph. 22509, 22782, 22824.